சேசு மரிய சூசை துணை

இஃது

காமேநாயக்கம்பட்டி மகா-ா-ா-ஸ்ரீ

**M. T. புதுமை நாடாரவர்கள்**

வேண்டுகோளின்படி

ஈராக்ஷி மகா-ள-ா-ஸ்ரீ வித்வான்

**S. A. V. மரிய ஞானப்ரகாசம்**

பாகவதரவர்களால் இயற்றப்பெற்ற

# ஜீவார்மித கீதம்

தற்கால நாகரீகத்திற்கிணங்க

**திருப்புகழ், வண்ணம், சிந்து, கீர்த்தனை,**

முதலிய நூதன வர்ண மேட்டுகளால் வரைந்துள்ளன

**விலை அணா 6.**

மதுரை ஸௌராஷ்ட்ர பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றது.

முதல் பதிப்பு.

1000 [காப்பி 1000.





சேசு மரிய சூசை துணை

# ஜீவார்மித கீதம்

வெண்பா

சீரூரு மெஞ்ஞான சித்திமுத்தியோடருமைப்
பேரூருமிக்கீதம் பேசுதற்கே நேரூருஞ்
சங்கை மிகுந்துங்சுவல கெங்கு நிறை சர்வேசுரன்
பங்கயத்தாளே பணிகுவாம்.

'மலர்மகளுறை திருமணி மார்பா'—என்ற—மெட்டு
இராகம் செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

திருமுக தெரிசனம் தரவேணும் என்மேல்
சித்தம் மகிழ்ந்தித்தருணம் வரவேணும், (திருமுக)

அநுபல்லவி

அருள் மரிபாலனே ஆண்டருள் சீலனே
அநுதினமுனையகம்பதித்தேனே மிக
அன்புடனே நின்புகழைத் துதித்தேனே (திருமுக)

தொகையரு

ஆதிமூலாதரா அகிலாம்பரநாயகா
ஜோதி சர்வேசுரா தூயாகிருபாகரா

பாட்டு

தோத்திரமையனே கீர்த்தனஞ்[illegible]
துன்பவினையகற்ற வருவோனே எனக்
கின்பசுகங்கள் மிகத்தருவோனே (திருமுக)

தொகையரு

சுத்த நிர்க்குணகரா ஜோதிப்பிரவாகரா
பக்தர் வித்தியாதரா பாரில் நிரந்தரா

பாட்டு.

பத்தியாய்த்தானே பஜனை செய்தேனே
பாலன் புகல் கவியைக்கேள்கோனே இந்தத்
தாலமீது வந்தாளுவாய் சீமானே (திருமுக)

---

'குழுக்குத்துரை வேலவா'—என்ற—மெட்டு.

2. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

திருக்கண்ணோக்கிப்பாரையா தீமை தீரையா (திரு)

அநுபல்லவி

விருப்புடன் நானே வேண்டுகின்றேனே
திருப்புகழ்தாரும் சீமானே கோனே (திரு)

தொகையரு

திருக்குருசேறி மறித்துயிர்த்தோனே
தீயர் பாவவினை தவிர்த்தோனே
அருளெனக்கிரந்து அன்புடனே வந்து
அடைக்கலந் தாருங்கோனே

பாட்டு

அருவுருவாய் எங்கும் ஆனந்தமாய் விளங்குந்
திரிபொருளான தேவாதி தேவா (திரு)

---

'கடவுள் தன் சேயே'—என்ற—மெட்டு.

3. இராகம்—அமீர் கல்யாணி—தாளம்—சாப்பு.

பல்லவி

கருணைப்பிரவாகா காப்பாயேகா (கரு)

### அநுபல்லவி

திருமரி அணைபாலா சிருபர் மேலா
திரிஉலகுமமைத்ததேவ செங்கோலா
ஜீவனேசா பாவநாசா (கரு)

### சரணம்

ஆழிசூழுலகானதிற்பல
கவலி சோதனை நாடிடாமலே
நாளிலும் மறவாமலே திருத்
தாளிணை நினைந்தேற்றினேனிது
சமயநலமே எமது குறையைத்
தவிருமிறையே தருமத்துரையே (கரு)

### தொகையறு

அண்டபரமண்டல மிவ்வெண்டிசையெலாம் நிறைந்
தரூபியாய் நின்ற தேவா
தொண்டனுமை இரண்டுகரங்கொண்டு துதி
விண்டு புகழ் கூவ

### பாட்டு

அன்புடனருள்புரி அம்பரநாதா
நன்புதுமென் மீதிலின்புறும் நீதா (கரு)

---

'பழனியாண்டவனே'—என்ற—மெட்டு.

4. இராகம்—தேசிக தோடி—தாளம்—ரூபகம்.

### பல்லவி

கருணையாம்பரனே உனதிரு
கழலிணை அநுதினந்துதிபுரி புதல்வனுக்கிது தருதி அருள்புரி
கர்த்தனே சுத்தனே நித்தனே
பத்தியாய் நத்தினேன் ஆதவி (கரு)

### சரணம்

திருமரியின் வயிற்றிலுதித்தவா
தீயபாவிகளை இரட்சித்தவா

அருமையாய் அம்பரம் தாக்கிந்தவா
அன்பர்க்கருமருந் தெனவுறும்
இன்பர்க்கதிசுகந் தினந்தரும்
ஆதிமாமறைக்குகந்த
ஜோதி ரூபமாயமர்ந்த
ஆரணனேபரி பூரண
காரணனே கலி தீரனே
அத்தனே சித்தனே நித்தனே
முத்தனே வெற்றியளித்தருள் (அரு)

(2) அன்று யூதாசும்மைக்காட்டிக் கொடுக்கவே
அப்போதே யூதர்வளைந்து பிடிக்கவே
கன்றையிழந்த பசுப்போல் திடிக்கவே
காய்ப்பாசரண்மனைமீதுறும் மூப்பர்கள் முன்னிலைதனி [லே
காறியேயுமிழ்ந்து வஞ்சர்
சீறியே கொடிய நெஞ்சர்
காருண்யராகிய நினையவர்
பூரணமாபதியாதனை
கட்டினர் குட்டினர் துட்டர்கள்
திட்டையுமே சகித்திட்ட (கரு)

---

'சடை தரித்து மகுடம் வைத்த'—என்ற—மெட்டு

5. இராகம்—காப்பி—தாளம்—ஆதி

பல்லவி

திருமரிவயிற்றில் வந்துதித்தவேதா பெருந்
தீயர் பாவந்திர மருந்தீந்தபோதா
குருசினில் உயிர் விடுத்துயிர்த்த நாதா பெருங்
கோலா கலப்பிரசங்கம் புரிந்தநீதா
கொற்றவரும் புகழ்ந்தாட இன்
புற்ற இன்னிசைபாட
இனிமை சேர்ந்
திலகுசார் (திரு)

'அருள்க்கடல்ஞானனந்தம'—என்ற—மெட்டு.

6. இராகம்—பார்வி—தாளம்—ஆதி.

பல்லவி

பரஞ்சுடர் ஞானனந்தம் பரம்புதே இப்பார்தனிலே
பல்லோர்க்கு மின்பம் நிரம்புதே

சரணம்

நிரந்தரரூபனே நீதிப்ரதாபனே
நீடாழியில் நடந்த நீதனே என்றும்
நிலையானஜீவனே தலையானதேவனே
நேரான பேரானந்தந்தருவோன்
நிகரிலா இகபரசுகமருள்புரிதிரிபுர (பர)

(2) மந்திரோபதேசனே மாமரி நேசனே
வானோர் புகழும் விசுவாசனே மிகு
மாட்சி நிறைந்தவன் காட்சி புரிந்தவன்
மங்காத செங்கோல் செலுத்துபவன்
மாசிலா தேசிகம் வீசிடும்
ஈசனே பிரகாசனே மெய் (பர)

---

'தேவா சம்போசிவா'—என்ற—மெட்டு.

7. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி

பல்லவி

தேவா ஜெயவல்லவா
சித்தம் மகிழ்ந்தித்தினம் பத்தனைக்காவா (தே)

அநுபல்லவி

மூவா ஜெயவல்லவா
முக்தர் பக்தர் சித்தரோடு முன்னின்றவா (தே)

சரணம்

ஆறுசாடி தண்ணீரை அருந்தரசம் செய்தவா
நாறும் பிணத்துக்கு மூன்றும் நாளிலுயிரீந்தவா
நாதனே வேதனே ஞான போதனே எனை வந்தாளும் (தே)

(2) மானிடரை மீட்க இந்த மானிலத்தில் வந்தவா
கானமலைமீது கருணைப்பிரசங்கம் செய்தவா
காரும் அருள் தாரும் கலி தீரும்முகம்பாரும்பா (தே)

(3) நேசமுடனுந்தனை நினைந்தியம்பும் செந்தமிழ்
ஆசையுடன் கேட்டு அடியேனுக்காசிர்வாதம் விள்
ஐயனே மெய்யனே ஜீவதய்யனே எனை வந்தாளுந்(தே)

---

8. 'நாலு வேத மூலாதாரநாதனே'—என்ற—மெட்டு.
இராகம்—இந்தூஸ்தான் தோடி—தாளம்—ரூபகம்.

கண்ணிகள்

வேதபோத ஜீவாதார விமலனே நமோ
வேண்டிமெடியோர் மிடிதீர்க்கும் வித்தகாநமோ.
வேனா தானா வேண்டி நிற்கிறேன் (வே)

(2) பண்ணவர்களே பரவும் அண்ணலே நமோ
பண்டு சீனுபர்வதத்தில் பத்திந்தோய் நமோ
பாரும் வாரும் பாதுகாருமே (வே)

(3) ஆதியே பரஞ்சோதியே அனாதியே நமோ
அகிலமும் பரம் நிறைந்த ஆண்டவா நமோ
ஆளும் நாளும் அருள் மொழி கேளும் (வே)

---

'செந்திக்குமாரவேலுண்டு'—என்ற—மெட்டு.
9. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

பாதத்துணை நமக்குண்டு பரமதிரு
பாதத்துணை நமக்குண்டு இந்த
பாரொடு விண்ணுமொண்ணுக நிரந்தர
ராக இருந்தரசாள் கிருபாகர (பாத)

அநுபல்லவி

நீதவேத ஞானபோத ஜீவகிதமோதநாத (பாத)

சரணம்

திருவாயால் இருமாநில முஞ்சீர்
பெறுவீரெனமாஸிடரிடமருளிய (பாத)

(2) பெருமிதமான கபாலமேருவில்
திருகுருசானதிலுயிர் விடுத்துயிர்த்த சீர் (பாத)

'தேவி உமைபாலா'—என்ற—மெட்டு.

10. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஏகம்.

பல்லவி

அன்னைமரி பாலா அகிலாம்பரமான் லோலா (அ)

அநு பல்லவி

வின்னை நம்புந்தாசனுக்கு உன்னதவரமருளும் (அ)

சரணம்

நித்தமும் நெஞ்சில் நினைந்து பக்தியுடனே பணிந்து
நத்தி உனைச்சுற்றிவந்து முத்திசெய்தேன் காத்தருளும் (அ)

(2) திருவுருவாக இலங்கும் சேயரகத்தில் துலங்கும்
அருமையுடனுசிர்வதித் தப்பனேவரமருளும் (அ)

'கழுகுமலைக்கு நாம் நேரே'—என்ற—மெட்டு.

11. இராகம்—பைரவி—தாளம்—ரூபகம்.

பல்லவி

பரஞ்சுடரே வருவீரே ஞான
பத்தி வெற்றிமோன சித்திசெய்—ஏக—பரஞ்

அநுபல்லவி

நிரந்தரரூப சொரூப சிறந்தரம்புரி திரி புர (பர)

சரணம்

மட்டற்ற அற்புத மாட்சி தரும் வரன்
வானவர் தானவர் போற்றுந்திரிபரன்
இட்டமாம் பக்தர் இதயத்துறும் அரன்

இங்குமங்குமாக எங்கும் நிரந்தரன்
எழில் மலர் அடிகளை நானே
ஏற்றுகிறேனே சீமானே
பொழிந்திடுவீர் அருள்கோனே
புகன்றிடும் கவிக்கின்றுதானே (பர)

---

'மேகவண்ணனேயுனை விடமாட்டேன்'—என்ற—மெட்டு.

12. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

பாதம் நம்பினேன் திருப் பரனே வந்தருள் புரியும் (பாத)

சரணம்

வேதவேதாந்த ரூபா விண்ணோர்பணி அரூபா
யூதகுலவிரூபா யோதி வித்த சொரூபா
உலகநித்தியமே இறை உண்மைசத்தியமே உனை
மறவேன் நித்தியமே (திருப்பரனே)

(2) திதையகற்றவந்தீர் திருவசனம் புகன்றீர்
பாதகர் மீதுவந்தீர் பாடுபடத்துணிந்தீர்
பவத்தைப் போக்கினீர் பல அவத்தை நீக்கினீர் அம்
பரத்தை நோக்கினீர் (திருப்பரனே)

(3) பூமகனே எத்துணையும் புரிவீரே நற்றுணையும்
பாமாலையைப்புனையும் பாலகனை நினையும்
பரமநாயகனே நின் பாதம் தாயகனே நிதம்
பத்தி புரிகிறேனே (திருப்பரனே)

---

'நித்தமுனை மறவேனே'—என்ற—மெட்டு.

13. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

பக்தி தந்து ஆள்வாயே பரமநாயகா நீயே
நாயகா நீயே தாயகா நீயே (பக்)

அநுபல்லவி
நித்தியமாய் நிஷ்களமாய் நின்மலநிராமயமாய்
நினைருதரிக்கின்ற மரிமைந்தா மகிழ்ந்தெந்தநாளும் (பக்)

சரணம்
பொன்னுலகிலே விளங்கும் பூவுலகெலாந்துலங்கும்
புண்யா காருண்யா உனை நண்ணிதுதிபண்ணினேன் (பக்)

2. ஐந்து அப்பமே எடுத்தீர் ஐயாயிரம்பேர்க்களித்தீர்
ஐயா எசையா மேசையா துதி செய்தேன் திரு (பக்)

---

எட்டப்பரா ஜேந்திரனடி—என்ற—மெட்டு.

14. இராகம்—காப்பி—தாளம்—ஆதி.

கண்ணிகள்
ஞான சருவேசுரனை வானோர்பணி துய்யோனை
மோன குருபரனைத் தியானஞ் செய்து தினமே ஜெபித்தால்
நாம் ஜெபித்தால்
நயந்தருமே ஜெயந்தருமே ஜெபித்தால்

(2) அந்தகனிருள் நீக்கினோன் மைந்தர்முகம் நோக்கினோன்
பந்த பாசந்தீர்க்க வந்த சந்தமரிமைந்தனை நாம்
ஜெபித்தால் நாம் ஜெபித்தால்
நயந்தருமே ஜெயந்தருமே ஜெபித்தால்

(3) உலக பவந்தீர்க்க வந்தோன் பலதேவரையகற்ற வந் [தோன்
வலக்கள்ளனுக்கருள் தந்தோன் மலரடியைத் தொழுது [தினஞ்
ஜெபித்தால் நாம் ஜெபித்தால்
நயந்தருமே ஜெயந்தருமே ஜெபித்தால்

(4) ஐந்து அப்பம் பகிர்ந்தோனை ஐயாயிரர்க்களித்தோனை
மைந்தோன் குஷ்டந்தீர்த்தோனை ஐந்து காயம் பெற் [றோனை
ஜெபித்தால் நாம் ஜெபித்தால்
நயந்தருமே ஜெயந்தருமே ஜெபித்தால்

சரணம்

மைந்தன் மீது அருளோ வரவேண்டும்
வறுமை நீக்கிப் பொருளோ தரவேண்டும்
சுந்தரமும் உனது தாளிணை வேண்டுந்
தஞ்சஞ்செஞ்சரணங் கெஞ்சுதேன் தருணம் (வந்)

(2) பக்தியுடனே தினம் பாடிடவேண்டும்
பரம நாயகனே புகவேண்டும்
நித்தியவரசைநீடுமே தரவேண்டும்
இன்னிசை சம்புமெனக்குள்ளருள் புரிந்து (வந்)

---

பாண்டிய நீண்ட மீனாட்சி—என்ற—மெட்டு.

17. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

அம்பர நீண்ட சுக் காட்சி உலகில்
அற்புதக் காட்சி

அநுபல்லவி

நம்பினோர் இன்புறுஞ் சூழ்ச்சி பெரிய
நன்மையுண்டாச்சி (அ)

தொகையறா

தேவ ஆசனத்திலே செங்கோல் செலுத்திடுந்
தேவரீர் இரங்கியே இந்தப்
புவனத்திலே பிறந்தெமைக்காத்தது
புதுமையே பெரியதோர் விந்தை

பாட்டு

புரிந்த காருண்ணிய மெய்யோனே பொற்பாதம்
போற்றுகின்றேனே (அ)

தொகையறா

மாமரி வயிற்றிலே மனுவடிவாகவே
வந்ததைத் தெரிந்திடா வஞ்சப்
பாமர யூதர் பகைஞருக்குற்றம்
பண்ணிடப் பொறுத்தருள் செய்தே

பாட்டு

பாக்கிய மோக்ஷந்திறந்தார் பல்லோர்க்குஞ்
மிலாத்தியம் புரிந்தார் (அ)

பாராமுகம் ஏனையா—என்ற—மெட்டு,

18. இராகம்—இந்துஸ்தான் பியாக்—தாளம்—ஆதி.

பல்லவி

தேவா வுமை நம்பினேன் சித்தம் வைத்தருள் (தே)

சரணம்

மூவா முதல்வா சர்வ ஜீவாபிமானியில்லா யே
கோனா முத்தொழில் யாவும்
ஏவாமலே நடத்துஞ் சூழ்சி
அனேகவித மாச்சி
அரும் பவத்தின் மீட்சி
அற்புதக் கண்காட்சி
அகண்ட பர சாட்சி புரிபரம (தே)

(2) கண்ணுங் கருத்தினிலும் எண்ணுமெழுத்தினிலும்
விண்ணு மண்ணிலுங் கலந்
தன்னையெலாம் பரமவஸ்து
அமிர்த ஞானக்கொத்து
அற்புதந்தரும் முத்து
அரிய ஞான சித்து
அடுக்கு மொழி பத்துங் கொடுத்தபர (தே)

---

இன்னமும் பாராமுகமாராமா—என்ற—மெட்டு.

19. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

ஒருநாள் என்மீதிலிரங்கவாது ஏக
பரனே யருள்புரி யிப்போது (ஏ),

அநுபல்லவி

ஞானமறிந்தாய் உரைப்பதாவுந் தெரிந்தாய்
ஓதோர் கோர மாமறுவேலா நாலாவிதத்தாம் (ஏ)

சரணம்

மாயாபுரியிலே நானே மயங்கித் தியங்கலானேனே
தூயா அன்னை மாமரி சேயா வன்பர் சகாயா
சத்தியம் நித்தியம் பத்தியாய் போற்றினேன் (ஏ)

(2) எனது வறுமை தனைத்தீரும் இன்ப சுகங்கள் மிகத் [தாரும்
மனக்கவலையை நீக்கும் மாபவந்தனைப்போக்கும்
மாதா நற்போதா பொற்பாதா சற்பிரசாதா (ஏ)

---

சந்தானந்தம் பாடுதே—என்ற—மெட்டு.

20. இராகம்—ஹிந்துஸ்தான் பியாக்—தாளம்—ஆதி.

பல்லவி

வந்தானந்தங் கூடுதே வானோ
னருள் நீடுதே (வந்)

அநுபல்லவி.

சுந்த மிகுந்த சுகந்த பரிமள
சிந்தை யிரங்கியே மைந்தனுளமீது (வந்)

தொகையறா

செந்தாமரைப்பதந் தந்தான மைந்தனை நோக்கி
சந்தோஷமாயுந்த நன்மையே புரிந்துனுளாக்கி

பாட்டு

தனையனுக்கருள் தந் தாவந்தவா
சச்சிதானந்தா (வந்)

தொகையறு

திரிலோக பரிபாலனஞ் செயுந்தேவனே ஞான
ஒழியேனை மறவாது இருதயந்தனி லாளுங்கோனே

பாட்டு

ஜெய ஜெய ஜெய கீதம்பாடவே
தினமன்றாடவே (வம்)

---

பறுக்கை ஸ்ரீ பஷூலைஜீ—கல்நா—மெட்டு.

21. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி

பல்லவி

சித்தமிரங்குவாயே கோவா
தெரிசித்தேன் தேவா (சித்)

அநுபல்லவி

பக்தியுட சித்தம் சுத்திசேன்
பரதேவா காவா (சித்)

தொகையறு

பவசாலம் விலகாது நினைவிலேயகலாது
பால நான் நம்பி வெம்பி

பாட்டு

பரிதவிக்கிறே நசிந்து
பாதுகா குவந்து (சித்)

சரணம்

தாலமீதன்பி தவந்து கோலப்பாயாசே
ஆலசியமின்றியேற்றி அடியிணை சாற்றி

தொகையறு

ஆவா வெனத்தொண்டன் வாவாவெனக் கூவி
ஆதலாயில் நின்று தாவி

பாட்டு

அழைக்கிறே னகங்கனிந்து
அன்பன் மீதிலவந்து (சித்)

---

மார்த்தாண்ட பாருதேனே—என்ற—மெட்டு.

32. இராகம்—கமாஸ்—தாளம்—ரூபகம்.

பல்லவி

எதிட்டுப்பாருதேனே எம்பர சாதா (எதி)

அநுபல்லவி

பாரினை எட்டிப் பாலன் வெம்பி வாடுறேன் (எதி)

சரணம்

ஈன்று புரிய வென்று ஊருபுலகில் வந்து
அன்று குருசிலுற்று ஐந்து காயமும் பெற்று
அதிலுறன்ருருதி அருவியால் பசும்
அப்போதே நீக்கித் துப்புரவாக்கி
அற்புதஞ் செய்த தற்பரா நோக்கி (எதி)

2. பின்னுமுன்னவிக்கிப்போது இன்னந்தாமதமேது
சின்னஞ் சிறுவன்மீது என்ன வர்மமோது
திரிபொருளாயேக திரித்துவமுமாக
திரியுங்காருண்ணிய சொரூபியாகிய
சித்தனே அருள் கர்த்தனே வுன்னை
நித்தமுந்தொழும் புத்திரன் தன்னை (எதி)

---

காருண்யனே அருள் கர்த்தா—என்ற—மெட்டு.

23. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி

பல்லவி

ஆனந்தமே பரமானந்தமே யருள்
ஆனந்தமே மோக்ஷானந்தமேயருள் (ஆன)

சரணம்

ஞானபோஜனம்பெற நான் விரும்புநேனதை
தானமாயருள்பா தயாளகுணகர (ஆன)

2. அப்பமாகவே வந்தாய் ஆத்மபோஜனந்தந்தாய்
எப்பொழுதும் மாறாத இன்பசுகம் நவின்றாய் (ஆன)

3. ஆதிமானிடர் செய்த அரும்பவ இருள்போக்க
ஜோதிப்ரகாசமாகத் தொல்புவிமீது வந்த (ஆன)

---

ஆண்டிப்பண்டாரம்—என்ற—மெட்டு.

24. இராகம்—இந்துஸ்தான் காப்பி—தாளம்—ஆதி.

பல்லவி

ஆத்ம நாயகமே அகிலாம்பரதாயகமே பர-மாத்

சரணம்

பார்த்திரங்கி மானிடர்கள் பாவவினைதீர்க்கவென்று
காத்திருந்துமரி வயிற்றில் கருணைசெய்யவே பிறந்த (ஆத)

2. பன்னிரு சீடருடன் பாரில் சுற்றித்திரிந்து
நன்மையுறு மெய்ப்போத ஞானவுபதேசஞ் செய்த (ஆத)

3. பொல்லாத யூதர்கையில் சொல்லொண்ணாத பாடுபட்டு
கல்வாரிமலையிலிரு கள்வரோடயிறந்த (ஆத)

4. தாசனுமைப்புகழ்ந்து சாற்றுங்கவிக்குகந்து
தேசாசீர்வாதமென்மேல் திகழக்கடைக்கணியே (ஆத)

---

வங்காரமார்பிலணி—என்ற—மெட்டு.

25. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—சம்பை.

கண்ணிகள்

அன்னாளிலே யனேக ஆச்சரியமே புரிந்தீர்
இன்னாளி லேயுமது போல அன்பன் மீதிரங்கி
என்னைக் காத்தருள வேணுமெனப்பேணுதிரி பெருமானே

2. தீராத பாவவினை தீர்த்தருள வேணுமென
ஏராத பாடுபட்டு ஈடேற்றி னீ குணது
தாராள மான அருள் தாருமெனக்காருமேக சர்வேசா

3. சந்தோஷமாக இந்தத் தாரணியோர் மீதிரங்கி
வந்திரே மானிடனு மாமரியின் மைந்தனென
எந்தாயின் பாத மற வாது தின மேதுதித்தேத்திடுவேனே

4. மங்காத ஞானபிரகாச வொளிர் வீசவருள்
தங்கா நின் ருளி னைப நாளு மறவாதடியேன்
சிங்கார மான கவி பாடி யுனைத்தேடுகிறேன் ஜெகதீசா,

---

கருவிலுருவாகி—என்ற—மெட்டு.

26. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—சம்பை

கண்ணிகள்

உலகிலுருவாகிவந்து வுயர்மறைகளே புகன்று
நலமருளிவீர் பெரிய பெருமானே

2. அலகைபுரிகலகமதை விலகி இதமே புரிந்து
இலகுபரகதி திறந்த இறையோனே

3. திருவிலகு மிருபாத கமலமதையே தொழுகும்
சேயர்களினுயகமே வுருவாயே

4. கிருபையுள்ள மரிமக வெண்ணிருதய மீதேயுறையும்
கேண்மையுடனே தினமுமறவேனே

---

பாலைவாய்கமுகில் வந்த—என்ற—மெட்டு.

27. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—சாப்பு.

கண்ணிகள்

மானிடரை மீட்க இந்த மாநிலத்திலே பிறந்த
மாமரி மைந்தனே யென்னைப்பாருமே அருள்
தாமதமின்றியுவந்து தாருமே

2. தேசுலாவு காவனத்தில் வாசமுறுதாமிடத்தில்
பேசினீர் பிரத்தியச்சமாகவே நேச
மேசியாவது போலென் முன்பாகவே

3. வாருமென்னைக்காருமருள் தாரும் பரதேவா வும்மை
வந்தனஞ் செய்தேன் கடைக்கண்பாருமே சிறு
மைந்தனைக்காத் தாசீர்வாதங்கூருமே

4. திருவுரும்பரத்தில் வாழுந் தேவனே என்மொழிகேளுஞ்
சித்தனே வித்தனே ஞானகர்த்தனே பாத
தெரிசனந் தந்தென்னையாளு நித்தனே

---

நாமதிக்காமல் நீ—என்ற—மெட்டு.

28. இராகம்—கல்யாணி—தாளம்—ஆதி.

ஓரடிக்கீர்த்தனை

மாமனுவேலானே வாராயோ மனமகிழ்ந்து (மா)

சரணம்

காமமிலங்கயிந்தப் பூமனுவாகவந்த
நாயகமே பரம தாயகமே நவ
இரத்தினமணியேவா நவிலுகதி
யத்தாணி மீதுறுவா கவிஞறுக்குன்
பொற்பாதமே தருவா இந்த
நானில மீதினி தாகிய தேனிலுமே இனிதாகிய
ஞான சன்மானங்களைக்
கொண்டுங் கொண்டுங் கொண்டுங் கோடிதனைக்காட்டி
கோலவர்னங்கள் சூட்டி
குருச்சிலையில் நீட் டி
குணுங்கினத்தை யோட்டி
கருணை செய்ய இதுநற் றருணந்தருணமையா
விருப்பியசிறியனைத் திரும்பியே முகம் நோக்கிப்
பாரும் பாரும் பாரும் பரம்பொருளே

வாரும் வாரும் வாரும் வரந்தரவே
தற்பரநாதனே அற்புதபோதனே
பொற்பாதம் நம்பினேனே இப்புவிமீதிலே
அந்தரத்தோர் விளங்க தந்தமிகள் முளங்க
அனைமரியுடனுற எனையே மன்றுகிறேன்
அத்தனே இத்தினம் வெற்றியளித்திட
நித்தமிரங்கியே காப்பாயுனது பாரம்
ஆதியே அருளும் பரஞ் சோதியே அகிலமெங்கும்
நீதியாய் விளங்க ஞான மோதியசருவஜீவ (மா)

---

பாலாபிஷேகப் பழனிமலையப்ப—என்ற—மெட்டு.

29. இராகம்—சிந்து பைரவி—தாளம்—சாப்பு.

பல்லவி

ஜீவாமிர்த அப்பமாகவந்த பர
தேவனின் செவடியானந் தமே (ஜீவா)

அநுபல்லவி.

நாவாலதை ருசிப்போர் ஜெபிப்போருக்கும்
நற்பரநாம மிகு சொந்தமே (ஜீவா)

தொகையரு

ஜீவர் யாவராலு மளவிடப் படாத
சித்து வித்தாயிலங்கும் வஸ்தே

பாட்டு

சிறுவனுன் திருப்பிரசாதமேவுண்டேன்
ஒரு போது மாறாப்பிரமானந்தங் கொண்டேன்
தேனிலுந் தித்தித்த பாகு கற்கண்டிலுந்
திவ்ய போஜன மான (ஜீவா)

தொகையரு

பாவசம் மாரனே பரகதிக்கிறைவனே
பல்லுயிர்க்காக வந்தோனே

பாட்டு.

பலபிணிவறுமை வாராமலே தடுக்கும்
பல்லுயிர்க்கும் பரமானந்தந் கொடுக்கும்
பந்தன் மீதன் பொடு இத்தரையில் வந்த
சுத்த பரிபூரண (ஜீவ)

---

திருப்பரங்கிரி வாசா—என்ற—மெட்டு.

20. இராகம்—நாத நாமக்கிரியை—தாளம்—ஆதி.

பல்லவி

ஆத்மரக்ஷண்ணிய அப்பமே மோக்ஷ
ஆனந்தந் தருங்கற்பமே பர (மாதமே)

அநு பல்லவி

காத்திடுமே கலி தீர்த்திடுமே கடைக்கண்
பார்த்திடுமே பவத்தை நீத்திடுமே மகத்வ (ஆத்)

சரணம்

பாவ துர்க்குணமுதல் யாவையும் பறத்தும்
பலபிணிவறுமை வாராமலேதுரத்தும்
கேவலமாகிய கிரியையைப்போக்கும்
கீழ்மக்கள் யாவரையும் மேல்மக்களாக்கும் (ஆத்)

2. இகபரசுகந் தந்து எவரையுங் காக்கும்
இன்புறுஜீவ அன்பையுண்டாக்கும்
புகரில்லாப்போத நன் னீதத்தைச்சேர்க்கும்
புல்லறிவோரையும் நல்லறிவாக்கும் (ஆத்)

3. சுகமருளானந்தச் சோதிவந்தடுக்கும்
தொல்புவியோர்க்கு மீட்பைக்கொடுக்கும்
பகைபழிபாவம் பற் றறவேமுடிக்கும்
பாழ் நரகத்துக்கே காமல் தடுக்கும் (ஆத்)

---

வேலனே இந்த வினையை என்—என்ற—மெட்டு.

31. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ரூபகம்.

பல்லவி

ஆதியே என்னையாளுந் தயாநிதியே இந்த
ஆதரையில் ஓதரிய பாதகம் புரிந்த எனை ஆளுந்தயாநிதியே

அநுபல்லவி

நீதியில்லாத அநீதிகளும் பல
வினைவாறுஅங்களவாறு மென் மனதாலும் புரிந்தேன் பலம் (ஆ)

சரணம்

சூதும் வாதும் பல கோதும் புரிந்தேன்
தூய்யோரையும் வீணாய் வைது திரிந்தேன்
ஓதுமுமது கற்பனை பத்தும் மறந்தேன்
ஓகோ உமக் கேற்றமா பாதக நிஷ்டூரனெனை (ஆ)

2. களவும் படித்தேன் கபடும் முடித்தேன்
கஞ்சாசிகரெற்று பீடியும் குடித்தேன்
அசிங்கவபராதசெயகந் திலலடுத்தேன்
ஐயோ பாவி யைய மீதே செய்தே னனே கந்தீமைதனை (ஆ)

3. அன்பில்லாப்பாவி நானானாலும் சேயே
ஆயிரமின்னுமே லானாலும் நீயே
என்மேலுறுங்குறை யாவும் பொறுப்பாயே
இகபரசுகமே தந்து அகமே களி கூர்ந்து வந்து (ஆ)

---

32. இராகம்—பைரவி—தாளம்—ஆதி.

பல்லவி

அஞ்சாதே மனமே அந்த
அன்பின மரிசுதன் நின்றொடிருக்கையில் (அஞ்)

அநு பல்லவி

அஞ்சாமலே வரும் வஞ்சகமாயை
பஞ்சுபோலோடிப் பறந்திடும் நிச்சயம்

சரணம்

வஞ்சகம் சூது வழக்கு விரோதங்கள்
சஞ்சலம் சிக்குத் தரித்திரம்
பஞ்சம் படை கொள்ளை நோய் பெரும் பாண்டு
பாராமலே பறந்தோடுஞ் சொன்னேன் சொன்னேன் (அ)

2. காளி கூளி பலகாற்றுக்கருப்பு பேய்
தாளி வயிற்றுச் சடாமுனி
மூளி மூதேவி மூட்டு வேதாளமும்
முன்னேறிவாராது சொன்னேன் சொன்னேன் உண்மை அ

4. காமக்குரோத விரோதங் கண்டமட்டும்
கள்ளங் கபடு சூதாட்டும்
மாமத மூட்டும் மதன் வாளிப்பூட்டும்
வாராதினி யெட்டிப்பாராது சத்தியம் (அ)

---

33. இராகம் பைரவி—தாளம்—ஆதி.

பல்லவி

இன்பமே வருமே அந்த
ஏகபரன் நம் மிதயத்திருக்கையில் (இன்பமே வருமே)

அநுபல்லவி

பொன்னும் நவமணி மின்னும் பலபணி
வர்னமாலையணி மன்னர் மன்னர்க் கொத்த (இ)

சரணம்

மாடமாடு வீடுகள் மாமணி மேடைகள்
மதகரி தண்டிகை மாக்கள்
கோடானு கோடி ரதங்கள் காலாட்கள்
கோதில்லாத சுற்றத்தார் புடை சூழ (இ)

2. நன்மை தழைத்திடும் நற்றவம் பூத்திடும்
உண்மையே காயாகக் காய்க்கும்
தன்மையும் தூய்மையும் சார்ந்து பழுத்திடும்
தற்பரனுக் குற்ற அற்புத மாகிய (இ)

போகசுகமே கொடுப்பாய்—என்ற—மெட்டு.

34. இராகம்—கான்டா—தாளம்—ஆதி.

பல்லவி

ஜீவரக்ஷணி அன்னையே திருவருள் செய் (ஜீவ)

அநுபல்லவி

ஆவலாய் நினைந்து சேவடிபணிந்து
கூவினேன் கனிந்து தாவி நீ விரைந்து (ஜீவ)

சரணம்

வரத்திலுதித்த உரத்தில் மிகுத்த
விரத்தராகத்தை மலர்த்து மணத்த
வானவர்க்கரசி மானவர் சிரசி
ஞானமொன ரிஷி யானதேனுருசி (ஜீவ)

2. பவத்தை விதைத்த விடத்தை மிதித்த
அவத்த மதத்தை சிதைத்த வதைத்த
பாலியேகுணா சீலியே அநு
கூலியேதயை சாலியே மனு (ஜீவ)

---

தையலே உன்னை நினைந்து—என்ற—மெட்டு.

35. இராகம்—கல்யாணி—தாளம்—ஆதி.

பல்லவி

அன்னையே நின்னை அகத்தில் நினைந்துருகி
அடி தொழுகிறேனம்மா (அன்)

சரணம்

சொர்ன மகுடம் பளீரென்ன பன்னிருமணிகள் துன்ன
பருதி அக்கினிமின்ன பாரினில் எந்தன் முன்னே
பாலனுடன் வந் தென்னை ஆசிர்வதிப்பாய் (அன்)

2. தாயே தற்பரனைப் பெற்றாயே சக்தியாய் வருவாயே
தனையனைக்காப்பாயே சத்பொருள் தருவாயே
சௌபாக்கியமீகுவாயே உனை நம்பினேன் (அன்)

காந்திமகான் போருண்டோ—என்ற—மெட்டு.

36. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

மாட்சிமிகும் மாதிரு பாதம் வாழ்த்துவோமே
மகிழ்ந் தேற்றுவோமே புகழ் சாற்றுவோமே

சரணம்

காட்சி புரிவாய் கருணை சொரிவாய்
கதிருடை அலங்காரி சுகவாரி உபகாரி விபகாரி இரு
கழலிணை தரும் மோக்ஷம் உறு
பழவினை வருஞ் சூக்ஷம் தனைக்
காலந்தவறாதே ஜெபதியானம் மறவாதே கற்
கந்தம் மிகு சந்தம் பிரமானந்தம் வருஞ் சொந்தம் அறி (மா)

2. கர்த்தனைப் பெற்றாய் கரத்திலெடுத்தாய்
கருணையம்பரந் தாயே மரியாயே அருள்வாயே பொருள்
[நீயே இரு
கழலிணை சிரஞ்சூடி மிக அழகுடனிசை பாடி எக்
காலுந்துதி நாளும் இன்மேலும் மென்மேலும் மறேன்
கன்னி விற்பன்னி கற்புன்னி விற்துன்னி பல (மா)

---

செந்தாளம் பூவுந்தேனுங்கமழ—என்ற—மெட்டு.

37. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

அன்னை நின்னடி பணிகிறேன்
ஆதரி கிருபாகரி மரீ (அன்)

சரணம்

பொன்னு பரணமுல்லைப் பூவாரங்களு மில்லை
புனிதமுடனே இனிதமாகவே
புகழ்ந்து புஷ்பமாலை சூடி (அன்)

2. மாசில்லாக்கன்னிகையே மாதவ விற்பன்னியே
மைந்தனு வந்து சிந்தை மலர்ந்து
எந்தநேரமு முந்தனை நினைந்து (அன்)

---

காட்சியாய் விளங்குங் கந்தா—என்ற—மெட்டு.

38. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஏகம்

பல்லவி

மாட்சியாய் விளங்குமாயே
மலரடியைத் தொழுதேன் தாயே
மைந்தனை வந்தாளுவாயே மாதாவே

சரணம்

காட்சி புரிந்து கடைக்கண் திறந்து
ஆட்சியர சாட்சிபுரி
அன்னையே நின்னையே பன்னாளும் வாழ்த்தினேன் (மா)

2. ஜெகமே வுன்னமம் சுகயோக க்ஷேமம்
ஜெபித்தவர்க்குந் திருநிறைந்த
சித்தர்க்கும் முத்தர்க்கும் பத்தர்க்கு மேமிகு (மா)

---

செந்திமானகரந்தனில் மேவிய—என்ற—மெட்டு.

39. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ரூபகம்.

கண்ணிகள்

கன்னிமாமரி யன்னையினமமே
கழறுவதே நம்மள் நேமமே இரு
கழல் பணிந்தால் வருஞ் க்ஷேமமே அதைக்
கண்டு தொண்டுபுரிந்தவர் கருளுண்டு மென்றுளங்
கொண்டு வாழ்த்துவீர்
காணலாம் பரமானந்த யின்பமே
கைவிடாதென் சொல்லை நம்புமே தெய்வ
கடாக்ஷம் நம்மீது எழும்புமே



2. தவிது ராஜகுலத்தி லுதித்தவள்
தற்பரனைப் பெற்றெடுத்தவள் வலு
சர்ப்பத்தைக் காலால் மிதித்தவள் இந்த
ஜகத்திலுறு கரர்க்கிகத்திலும் பர சுகத்தையுந் தரு மகத்துவ
தாயாபரியைத்தரிசியுமின்களே தக்க [மிகு
சீருரும் பூமான்களே தேவ
தாய்பதஞ் சேருஞ் சீமான்களே

3. ஆதவனையுடையாய்த் தரித்தவள்
அம்புலிமீதிலே நின்றவள் முடிக்
காறிரு மீன்களணிந்தவள் நம்மீ
தகமிகமகிழ்ந்திக சுகந்தர
அனுமதி செய்ய மகனிடமென்றும்
அங்கையில் ஜெபமாலை பிடித்துமே
அருந்தவஞ் செய்கிருள் நாயகி நம்மை
ஆதரிக்க நல்ல தாயகி

4. பத்து நூறு வானுஞ்சுகள் வந்தடி
சுத்தி வணங்கிடுவார்களே பய
பக்தியாய்ப் பாடிடுவர்களே கீதம்
பாடிப்பரனைக் கொண்டாடி கூடி மன்றுடிப்
பரலோகம் தேடிச்செல்லுவார்
பாரீரோ இவள் பாக்கியராக்கினி
பாதந்தொழுதிடவாருமே நல்ல
பாக்கியங்கள் வந்து சேருமே

---

துலங்கு செம்பொன் கோபுர—என்ற—மெட்டு.

40. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

வயங்குமம்பர னேடுறவாடிடும்
மாதா சந்தமரியே மக்களுக்காகவேண்டியே அருள்புரியுன்

மகனிடமென்றுந் தாண்டியே
மண்டல விண்டல மெண்டிசையும் புகழ் (மாதா)
மானிலத்திலே யுதித்த நீதி பெற்ற (மாதா)

சரணம்

மயங்காதுனை யென்னுரு மன்றுடிட
வல்வினை முழுவதுமே பறந்தோடிட
தியங்காதிருக்கவேயருள் மழை பொழிந்திட
தினந் தினந் திருப்புகழ் சேயர்கள் பாடிட
தேவா சிர்வாதம் வரவே சீர் பேருகவே (வ)

3. பாவி மீதிரங்கியுன் பாலனை நீயே
பரிந்து சிவாரிசி பகர்ந்திடுந் தாயே
ஆவியுமெனது சஞ்சீவியும் நீயே
அடைக்கலமுனதடி அண்டினேன் ஆயே
அன்பனைக்காப்பாயம்மையே அநுதினமும் (வ)

---

வேலவா யென்னை—என்ற—மெட்டு.

41. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம் ஆதி

பல்லவி

அன்னையே என்னை ஆளாயித்தருணம் (அ)

சரணம்

அன்னம்மாள் வயிற்றே அன்று நீ ஜெனித்தே
அரிய பெரிய ஆதரவு புரியும் (அ)
கற்பினுக்கரசே கன்னியர் சிரசே
காலை மாலை கழலிணை பணிகிறேன் (அ)
3. மரியதா சென்று மைந்தனுக்கன்று
வர் துவர்துயிர் தந்து இரட்சித்த (அ)

பகாரியாலா—என்ற—மெட்டு.

42. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

அன்னையே மாமரி அடியேனை ஆதரி (அ)

சரணம்

உன்னை நம்புந்தாசனை யோர் போதும் கைவிடாதே
பன்னகத்தலையைப் பின்னமாய் மிதித்த பரமனின் மாதே
பாலனை யிப்போதே பாதுகார்தப்பாதே உன்னைப்
பத்திமனத்தொடு நத்தி வந்தேனெனக்
கித்தினமே யருளுத்தமிஞான (அ)

2. பேரானந்த சாகரம் பொழியும் ப்ரமானந்தமே
சீருரச் செயுந்திருச்சேலடி சொந்தமே
சித்தம் வை நித்தியமே பக்தரின் துத்தியமே
பாடி நிதமுங்கொண்டாடித் துத்தியம்
தேடி இத்தறி ஓடி வந்தனன் (அ)

---

மன்றுளாடியவா—என்ற—மெட்டு.

43. இராகம்—தேசிக தோடி—தாளம் ரூபகம்.

பல்லவி

அன்னைமாமரியே மிகு
அன்புடனு வந்து ஞான மின்புடனளிக்குந் தேவ ! (அ)

சரணம்

அன்னம்மாவின் வயிற்றிலுதித்தவா
அம்பரனைக்கரத்திலெடுத்தவா
மின் முடியில் வான் மீன்கள் தொடுத்தவா
வேதமே பூஷணமாயணி போதமே இலகு சிந்தாமணி

2. என்று மன்பரிதயத்திருந்தவா
நன்று நன்று வரங்கள் புரிந்தவா
குன்றாச் செல்வமுங் கல்வியுந்தந்தவா
கோதிலாப் பரிமள ரோஜதிதிலாதரசுரிராஜ (அ)

3. ஆதவனையுடையாய் தரித்தவா
அம்பரனைக்கரத்திலெடுத்தவா

பாதத்தால் பன்னகத்தை மிதித்தவா
பாருலகோர்களுன் பாதமே சேருவோர் யாவர்க்குமே
யருள (அ)

---

ஆண்டவா ஆடுந்தில்லை—என்ற—மெட்டு.

44. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

ஆதரி அன்னை கன்னி மாமரி
ஆதியிலோதிய சோதியை ஈன்ற நீ (அ)

சரணம்

ஆதவ பீதாம்பரி அகிலாம்பர ராஜேஸ்பரி
அன்னையே அன்னையே அன்னையே அன்னையே நின்
ஆதாரமென்றவுன் பாதாரம் வந்து
பணிந்தேன் கண்பார்த்து பாலனைக்காத்து (ஆ)

2. அண்டிவந்தோர்க்குண்டு தொண்டருக்கருளுமுபகாரியே
உபகாரியே உபகாரியே உபகாரியே நீயே
உண்டுமென்றுமலர் கொண்டு வந்து இதோ
இரண்டுபாதத்திலுமிட்டு தொழுகிறேன் (ஆ)

3. திருவளரவேயுனது சேயர்களைப்பார்த்திரக்கம்
செய்யம்மா செய்யம்மா செய்யம்மா செய்யம்மா நின்
சிந்தைகளிகூர்ந்துன் சேயனுடன் வந்து
தீமையைத் தீர்த்து திருக்கண் பார்த்து (ஆ)

---

துடிக்குதமயிலில்—என்ற—மெட்டு.

45. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

மரியே கிருபா கரியருள் புரியே மைந்தர்க்குரிய
வரமே சொரியும் பரம சாகரியே இந்த
மானிலந்தனிலே நினைந்தினி தாகவே கவிபாடி வாழ்த்துறேன்

வருவாய் கிருபை தருவாயே தருவே மனதுறவே [ன்
மறவாத தெரிசனந்தரவே

2. முகில் ரதத்தின் மீதேறியே வருவாய் மூவுலகையாளும்
முப்பொருளைப் பெற்றெடுத்தவா தின
முனது பாத தெரிசனந்தர மனதிரங்கியே யெனதுளம்வர
முயலுறேன் கவி தயவாய்க்கேளம்மா முழுது முனது
செயல் கொடுத்திதமாயாளம்மா

3. உத்தமி சித்தமிரங்கித் தற்காத்தருளே உமை நம்பிய
பத்தனுக்கித்தினஞ் சற்றிரங்கும் பொருளே உன்
பாலனை மனுவேலனை அனுகூலனை மன்முடியருளும்
அன்னையே நின்னிருபொன்னடி போற்றினேன்
அகமகிழ்ந்து அடியேனனுதினமு மேற்றினேன்

---

புள்ளிக்கலாபமயில் பாகன்—என்ற—மெட்டு.

46. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

மோகூக முடி பெற்று அரசாட்சி மிகு
மாட்சிமையாய் செய்புந் தேவ நாச்சி நின்
காட்சி பெற சூழ்ச்சி யோடு
ஆச்சியே பணிந்தேன் எழிலாட்சி ஞான தேர்ச்சி

2. உடுமுடி புனைந்த ஒப்பாரி கொட்ட
மிடு துட்டக்கணங்கள் சங்காரி ஞான
உம்பரிம்பரும்பரவ அன்பு சொரியுங் கருணை வாரியுபகாரி

3. பாரோர் புகழுங் கன்னித்தாயே சிறு
பாலன் புகலுங் கவி கேளாயே விடப்
பன்னக மிதித்துமதி தன்னையுன் பகத்தில் வைத்த
[நீயே அருளாயே

4. அத்தனைப்பயின்ற மரியாயே உன்னை
நத்தி வந்தோருக்கருளுவாயே ஜெப
பத்தியில்லாப் புத்திரனுன்
நத்துகின்றேன் சற்றிரங்குவாயே அருளாயே

மஞ்சு நிகர் குந்தள மின்ன—என்ற—மெட்டு.

47. இராகம் செஞ்சுருட்டி—தாளம்—ரூபகம்.

கண்ணிகள்

வர்ணமணிமாலைகள் துன்ன அழகு சொர்ணம்,
பள பளென்ன வயிரக்கம்மல் காதினில் மின்ன பல
முத்திரத்தினம் வைத்திழைத்து வகுத்த சித்திரமானமணி
மகுட முஞ் சிரசி லிலங்க
வான்மீன் துலங்கப்பான்துயில் குலுங்க
வனுசர்ப்பத் தலையும் நசுங்க

2. முத்து நவரத்தினம் பதித்த சித்திரத்திணை
தத்திப்பூக்கணை யாழியும் விரலில் புனைந்த ஜெப
மாலையுந் தவனூலையும் மனுவேலையும் பூமாலையுங் காணத்
தெரிசனந்தந்தென்னையாளம்மா
சிறுவனுன்னை யனுதினமுந் திருவடி பணிகிறேன் பெம்மா

3. வெள்ளி தங்கத்தாலேயமைத்த அற்புதமான
பொற்றே ரிற்றனே விமலனோடுறுவாய் நீதானே கன
விண்ணோர் சூழவே பண்கள் நீளவே
அன்னையே வருவாயே யென்னையே
ஆள இத்தருணமம்மம்மா எனது தொல்லை
நீக்கவும் நல்ல வேளை வாய்த்தது மரியம்மா

4. என்றுமுந்தன் தொண்டருக்காக
மகனை வேண்டி மிகவே தூண்டி
இன்பங்கள் தந்திடு மன்னையே உனை
எந்த நேரமும் வந்தனை புரி
மைந்தன் செந்தமிழுக்கருள் புரி
இன்பமா மதுரக்கன்னியே
பனியன்னையே வுனை நண்ணியே
பாதம் பணிகிறேனெண்ணியே

செந்தமிழை யுலகினில்—என்ற—மெட்டு.

48. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

கண்ணிகள்.

பெற்ற தாயினும் நீயே உற்ற தாயாக இந்தப்
பேருலகில் விளங்குறாய் எல்லோர்களுக்கும்
பேருபகாரஞ் செய்கிறாய் இந்தப்
பிள்ளையின் மீதுனக் கெள்ளளவாயினும்
உள்ளமிழகாது கள்ளமோயே தபிப்
பிராயமோ தெரியாதம்மா எந்தன்மேல் பிடி
வாதஞ் செய்யாதே நீ சும்மா (பெ)

2 இப்பிரபஞ்சத்திலே யான் படும் பாடுனக்கு
எல்லாந் தெரியுமல்லவா தெரிந்திருந்தால்
இரங்குதல் ஞாயமல்லவா தாயே
ஏது என் மீதினில் வாது நீ செய்வது
ஓது அல்லாதொரு போதம் விடேனிரு
பாதம் பணிகிறேனம்மா யெனக்கு புகல்
பண்ணிவிட்டெங்குஞ் செல்லம்மா (பெ)

3. பாவி நமக்கு இவன் பகைஞனென நினைந்து
பாராதிருக்கிறாயா அல்லது வேறே
பராக்கிலிருக்கிறாயா நெஞ்சில்
பலவிதமெண்ணியெனை விலகிடலாமெனில்
மலரடி விடேனல மருளன்னை மரியே நான்
பாவிதான் பிள்ளையல்லவா என்மீதில்பட்சம்
வைத்திடவேண்டுமல்லவா

4 தேனில் விழ்ந்த ஈபோலே தியங்கி மயங்குமென்னை
தேற்றியருள் புரியம்மா சேயனுக்கின்றே
செப்புவாயருள் நீ பெம்மா உன்னைத்
தேடியே நாடியே பாடியே பஜனை கொண்
டாடியே யனுதினங்கோடி நமஸ்காரம்
செய்கிறே னிரங்குவாயே
சேயன்மேல்வர்மஞ் செய்யாதருள்புரிவாயே

5. கல்லுமிழகு மொழுக்கறையு முருகு முந்தன்
கருணை நெஞ்சிளகாதென்ன பாவி நான் பெருங்
கன்மியானதாலென்ன திருக்
கழலிணை கண்டவர்கள் பழவினையறுமெனப்
பழமொழி பெரியவர்கழறினதும் பிசகோ
கன்னிமரிய அன்னையே தஞ்சமாய்க்கொண்ட
என்முகம் பாராதென்னையே (பெ)

---

பட்சம் என்மீதில்லையோ—என்ற—மெட்டு.

49. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஏகம்.

கண்ணிகள்

இன்னும் பராமுகமா இதுதானுந்தன் தர்மமா
அன்னையே வாராதேனம்மா அடியேன் மீது கோபமா
அன்பனுன்னை நம்பிமிக வெம்புகிறேன் (இ)

2. சோதனை புரியலாமா துயரம் விளைக்கலாமா
சாதனையுஞ் செய்யலாமா தமியேன் மீதில் கோபமா
தாயேமரி யாயேதுணை நீயே ஆயே (சோ)

3. நெஞ்சமிரங்காயோ தாயே நிமலனை ஈன்ற ஆயே
சஞ்சலந் தீர்த்தாளுவாயே தயாளகுண நிதியே
தஞ்ச முன்னைக் கெஞ்சுகிறேன் சஞ்சலந்தீர் (நெ)

4. நித்தமு நெஞ்சில் நினைந்தே நின்தாளிணை பணிந்தே
சித்திரக்கனி புனைந்தே சேயனகங்கனிந்தே
தேடியே கொண் டாடியே பண் பாடுகிறேன் (இன்)

---

சோமசேகரன்றனும்—என்ற—மெட்டு.

50. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

தாயே மரியாயேதுணை நீயே நீயே நின்
தாளிணை பணிந்தேனருள்வாயே ஆயே (தா)

2. தஞ்சமென்றுன் செஞ்சரணம் வந்து வந்து உன்னை
கெஞ்சுகிறேன் சஞ்சலந்தீரென்று என்று (தா)

3. பாலகன் புகலுங்கவி கேளுங் கேளும் மிகு
பட்சம் வைத்திரங்கி யென்னை யாளும் ஆளும் (தா)

---

கூடலிங்கையனே—என்ற—மெட்டு.

51. இராகம்—தேசிக தோடி—தாளம்—ரூபகம்.

பல்லவி

சந்தமாமரியே திருத்
தாளிணையே பணிந்தேற்றினேன்
நாளினுமேயுனை வாழ்த்தினேன் (சந்)

அநு பல்லவி

இந்த மானிலத்தோர் வினை யோடிட
எந்தையாம் பரன் தன்னை மன்றுடிட
விந்தையாய் யெங்குமேயருள் நீடிட
வித்தகி இத்தினம் பத்தனுளத்திலே
மெத்தவும் நத்தினேன்
நின திருவடி தெரிசனந்தர
சிறியனவ்வருளே பெறவுறச் (சந்)

சரணம்

மதி நிதி பதி கதியோடு ஜெகம்
வாழும் அரசாளுமுனைத்
துதிபுரி யடியவ ரகமதில் வரவருள்
வேண்டினேன் ஆண்டருள் தூயமனோகரி
சுத்த மிகுத்த அகத்தொளிரும் மிளிறுற்றிடுந்
துங்கவனைச் செங்கரத்தில் ஏந்தி எழில்
பார்த்திடுமென்னுட்சியே நான்
தோத்திரம் புரிந்தேனென்னை
பாத்திரக்கஞ் செய்தருள்வாய் (சந்)

பரங்கிரியாண்டி—என்ற—மெட்டு.

52. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

பரமசாகரியே ஞான
வரமருள்புரியே வாரும் (பர)

சரணம்

இரவும் பகலு முன்னை மறவாதசேயன் தன்னை
பரமஞானக் கண்ணோக்கி
பக்குவ மிக்கன்ன முக்கிய மாகவே (பர)

2. ஆதாரமாக வெங்கும அகிலமெல்லாம் விளங்கும்
மாதாவே யுனது பாத
வந்தனஞ் செய்கிறேன் சிந்தை மகிழ்ந்தேக (பர)

3. சித்தமிரங்குமம்மா சேயனைக்கண்பாருமம்மா
உத்தமியே என்மீது
இத்தினஞ் சித்தமி ரங்கி தற் காத்தருள் (பர)

---

செந்தூர் நாயகமே—என்ற—மெட்டு.

53. இராகம்—பிலஹரி—தாளம்—ரூபகம்.

பல்லவி

சந்தமாமரியே தாளிணையே பணிந்தேன்
தயா நிதியே திருச் (சந்)

அநு பல்லவி

வந்தே மன துவந்தே தினது
மைந்தனைக் காத்தருள் (சந்)

சரணம்

ஏது யென்மீது பராமுகமாதாயே
ஏழை மன்றாட்டுக் கிரங்கிடாயோ நீயே
வாது செய்வ தாகாது அருளிப்போது பார்! (சந்)

2. மாட்சி மிகு மோக்ஷ ராச்சியமே யர
சாட்சி புரியுந் தயாபரியே பர
ஞாட்சி யவனியாள் சூழ்ச்சி அற்புதக்
காட்சி யென்னாட்சி நீ (சங்)

---

சரணம் சரணமையா—என்ற—மெட்டு.

54. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

தாதா தா தாவிணை நிழல்
தாயே மாமரியாயே ஆனந்தந் (தா)

சரணம்

ஆதாம் ஏவாளை அன்றளிசெய்த்த
வேதாளாத்தன்னைப் பாதாளம் வீழ்த்தின
வித்தகி நின் பாதந் துத்தியஞ் செய்கிறேன் (தா)

2. ஆதாரம் நீயே அன்பன் மீதாயே
அகமகிழ்ந்தின்ப சகந்தருமற்புத
அன்னையே நின்னிரு பொன்னடி போற்றினேன்

---

கழுகுமலைக்கு நாம் நேரே—என்ற—மெட்டு.

55. இராகம்—பைரவி—தாளம்—ரூபகம்.

பல்லவி

நாளொருபோது மறேனே தேவ
நாயகி சீர்பாதந் தாயக மாய்க்கொண்ட (நா)
கற்றவருங் கொற்றவரும் மற்றவர்புகழ்ந் தேத்திடு மூனை (நா)
நறுமணமிகு திருமலரடித் தெரிசனந்தர விரும்பிடுசேய (நா)
விருப்பொடு கவி திருப்புகழ்சிந்து விருத்தமுங் கவித்
[துறைகளும் பாடி (நா)
சாந்து கருணைபெய் சாகரி மறந் திடாதெனை யாதரி (நா)

சரணம்

திக்கெங்குமே புகழ் நாட்டிட்ட காரணி
தீயோர் தூய்யோரையுஞ் சேர்த்திட்ட பூரணி
தித்திக்கும் மதுரத் தேன்பொழியூரணி
ஜீவ அப்பனைந்தனை யேந்திய சீரணி
திருவடிமுடி புனை சூழ்ச்சி
ஜெபம் புரி மணிகைகயிலாட்சி
சேயன் புகல் கவி சாட்சி
சித்தர் பத்தர் சூழலாட்சி (கா)

---

56. இராகம்—ஆனந்த பைரவி—தாளம்—ஆதி.

பல்லவி

தேவதாயே வாருமே சேயனைக் கண் பாருமே

அநுபல்லவி

ஆவலாயுன்னையே கூவியழைக்கிறேன் (தே)

சரணம்

தஞ்சந் தஞ்சமென்றுமே கெஞ்சுகின்றே னென்றுமே
கஞ்சமலர்ப் பாத மஞ்சலி செய்கிறேன (தே)

2. பட்சம் வைப்பா யன்னையே யாதா காருமென்னையே
ரட்சகனைப் பெற்ற அர்ச்சயமாயுற்ற (தே)

---

அம்பாள் மதுரை மீனாட்சி—என்ற—மெட்டு.

57. இராகம்—தேசிக தோடி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

சர்வ ஜீவ உபகாரி அருள் தயாளகுணவாரி சிறந்த
தாதை குறை யாரி தயாளகுணகாரி தயாளகுணகாரி த (ச)

2. என்னேரமும் உனைத்தேடி நான் இனிய பதம் பாடி நின்றன்
இணையடியைச் சூடி இன்புடன் கொண்டாடி இன்புடன் இ (எ)

3. இன்னம் பராமுகமேது கவிக் கின்புறு யிப்போது நின் மீ
தியற்றுகிறேன் சாது இலகுவரமோது இலகுவர மோது

4. கர்த்தனைப்பெற்றவனுகூலி நின் கடைக்கண் பார் சீலி இர
[ண்டு
கழல் பணிந்தேனாலி கருணை செய்யமலி கருணை செய்யமலி

---

ஐயா பழனிமலை வேலா—என்ற—மெட்டு.

58. இராகம்—சகன—தாளம்—ஆதி.

கண்ணிகள்

அன்பர்க்கருள் புரியு மாட்சி உன
தடியிணை பணிகிறேன் சூழ்ச்சி
என்முகம் பார்த்திரங்கும் நாச்சி இக
பரசுகமருளுவாய் காட்சி (அன்)

2. பாலன் முகத்தை நோக்கிப்பாரும் ஏக
பானை மன்றுடி யருள் தாரும்
சாலவே ஞானமொழி கூறும் உந்தன்
தாளிணை தஞ்சந் தந்தாரும்

3. புவியில் வெகு புதுமை செய்ய உந்தன்
புண்ணியத்தால் நாங்களுய்ய
செவி கொடுத்தெனக்கருள் செய்யே திருச்
சேவடி மறகிலேன் மெய்யே

---

கண்ணைை எத்தனை—என்ற—மெட்டு.

59. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

பல்லவி

மன்னுதி மன்னர் குலத்திலுதித்த மரியே கிருபாகரியே உனை
வந்தனையே புரி மைந்தனின் மீது
உவந்து மிகுந்த சுகந்தர இத் தருதி
மனதிரங்கலையா மகியே மருவில்லா முத்து

மாணிக்கமே மகா கலைக்ஞானத்தி
நாதிக்கமே மதுவே
ரட்சாமிர்த நற்பாக்கியமே உன்னை
மறவா திரவும் பகலும் வருந்தி
வரவழைக்கிறேன் திருவுளமிரங்கி
வாது செய்யா தென்னை யாளுமம்மா சிறு
மைந்தன் முகத்தை நோக்கிப் பாருமெம்மா (மன்)

---

60. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

வண்ணம்

மண்டலத்திலே மிகுந்து தொண்டருக்கு நீயு வந்து
அண்டையிலே வந்து நவங் கண்டமட்டுஞ் செய்யு
முபகாரியே நான் விண்டிட இயலாச்சுகவாரியே
பொங்கு திங்களொளியினழகும் பங்கயப்பதத்
தழகும் செங்கரத்தில் நின்றிலங்குந் தங்கவன்
திருவழகுங் காட்சியே நான் கண்டிடவருவாய்
என் முன் ஆட்சியே இன்பாகவே
நண்பாகவே தென்பாகவே முன் பாகவே எழில்
சித்திர வர்ணம் நிறைந்த முத்து வச்சிரம் பதிந்த
தொத்திப்பூ மோதிரங்கையில் மின்னவே தங்கக்
கொத்துச்சரப்பளி ஜில் ஜில் லென்னவே
கதிர் தூசணி கடல் வாசனி கன காசனி கலை
பூஷணி கமழ் வாசனி இந்தக் காசினியில் மாசில்லாத
சேசுவை நீ ஈன்றெடுத்த ராஜகுலதேசிகமே
யோசியாமலே மகிழ்ந்து வாராயோ அருள்
கூசிடாமலே புகழ்ந்து தாராயே ஞான சேகரி
நன் மனோகரி தான சாகரி சற்குணாகரி இந்த்ர
நீலரத்னம் பச்சைக்கல் கோல நிறைந்த சித்திரப்பூ
வேலை புரிந்த கம்மலிருகாதிலே நான் கூறுவதுங்
கேளாயோ இப்போதிலே அக மேறாயோ சுகந்தாராயோ
முகம்பாராயோ எனைக் காராயோ மனப் பூரணமாய்

வரக்காலதாமதஞ் செய்யாதே பஞ்ச காலமென்
றறியாதோ உன் நெஞ்சமே சிறு பாலன் மீதுனக்
கென்ன சொல் வஞ்சமே இருளறுத்திடத் தெருள
ளித்திடப் பொருள் கொடுத்திட அருள் தொடுத்திட
இனி வாது புரியாதே ஒரு போதும் விடமாட்டேனிரு
பாதமும் பிடித்தேனிது உண்மையே மெய்ப்
போதமுமுணர்த்திடுவாய் நன்மையே ஜெய சீலியே
தயை சாலியே ஞான நூலியே அனுகூலியே
நின் பத்தன் பாடுஞ் செந்தமிழுக்கிரங்கினஞ்
சித்தமிரங்கி உத்தமி மருமமெலந்த நாளுமே
உனை நத்தினேன் சேயனை வந்து ஆளுமே
நவிலுத்தியே நல்ல பத்தியே ஞான முத்தியே
மோன சித்தியே தரவருவாயே

---

சாமி விவேகானந்தர்—என்ற—மெட்டு.

61. இராகம்—இந்துஸ்தான் பியாக்—தாளம்—ஆதி.

பல்லவி

ஊர்தமா மரியாயே உன்னத மனதிரங்காயே (ஊ)
உலகிடேற்று தற்குவந்த பரம நாயகனைப் பயின்ற (ஊ)

சரணம்

சீர்த்திப்பிரவாக மெங்கும்
ஊற்றும்ச் செகத்திலெங்கும் உற்றிலங்கும்
உன்மகன் தன்னைத்தூண்டிக்
கன்மிகட் காகவேண்டி
நன்மை செய் யென்றுந்தூண்டி நாயகியாள் (உல)

---

அப்பிகா உன் மகன் குகன்—என்ற—மெட்டு.

62. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—சாப்பு

பல்லவி

அம்மம்மா உன் மகன் பரன்
எம்பிரான் புண்யதப்பிரான்

சரணம்

அம்பர வந்தே திரிவான்
தூய பிர சங்கம் புரிவான்
நம்பித் யமறி வான்
நாதன் வேதன் நீதன் போதன் (அம்)

2. தீனர்களை யாதரிப்பான்
திவ்விய மொழி யுரைப்பான்
வான பரனைத் துதிப்பான்
வாது சூது ஏது மில்லான் (அம்)

3. மூடர்க்குப் பயிற்று விப்பான்
மூடவர்க்கு கைகாலளிப்பான்
சீடர்க்கு ஞானம் விளைப்பான்
சித்தன் வித்தன் சுத்தன் முத்தன் (அம்)

4. சேயர்களைப் பாது காப்பான்
சித்திரக் கவியைக் கேட்பான்
நேயர்க்கானந்த மளிப்பான்
நித்தியன் அத்தியன் சத்தியன் நிச்சயம் (அம்)

---

63. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

நொண்டிச்சிந்து

மாட்சிமிகும் மோக்ஷ நகர் வாழுகிற
காட்சியே நற் சூழ்ச்சியே நின் காட்சியைப் பெற
நேத்திரந் திறந்திருந்தே வெகு
ஆத்திரமாய்க் காத்திருந்து தோத்திரஞ் செய்தே
கீத ராகங்கள் பாடியே நின்
கிருபையைப் பெறுவதற்குறுதியாகிய

ஞான வுபதேசம் படித்தே நின்னடியை
நத்தியே நற்பத்தியோடு துத்தியஞ் செய்தே
காலைமாலையனுதினமும் விணைபுரியுங்
காட்டினு மென் ருட்டினு மென் வீட்டினு முன்னி
போற்றியே புகழ்ந்து யேற்றியே நின்னுடைய
பொற்பாதத்தை யெப்போது நான் அற்புதமாக
நித்திரை தனினு நினைந்தேன் நின்னுடைய
நெஞ்சி விஞ்சிரங்கி யெந்தன் சஞ்சலந்தீர்ப்பாய்
பாலனை ஆசீர்வதிப்பாய் நான்
பண்ணும் வினை தன்னில் நின்று புண்ணியஞ் செய்வாய்
இகபர சுகமருள்வாய் யென்றும்
இன்பன் மீதே இரங்கி அன்புறுவாயே (மாட்சி)

---

மாரன் வாதையால்—என்ற—மெட்டு.

64. இராகம்—பைரவி—தாளம்—ரூபகம்.

பல்லவி

சூசை மாமுனியே உம்மைத்
தோத்திரஞ் செய்கிறேன் பாத்திரக் கஞ்செய்யுஞ் (சூ)
துதி புரியடி யவர்க்கருள்புரி
மதிமுகநிதி கதியதி பதி (சூ)
தூய நேய நாயகனுகிய (சூ)
சுந்தர சவுந்தரனே மைந்தனைக்காரெந்த நாளுஞ் (சூ)
சுத்தனே சித்தனே பத்தனுக்கருளுஞ் (சூ)

சரணம்

ஞான நிறைந்து ததும்பும் பிரகாசமே
நற்கதி வித்தாய் முளைத்த விஸ்வாசமே
வான பரனை வளத்த நன்னேசமே
வந்துவந்து மைந்தனைக்காத்தருள் (சூ)

நேசமுறுவாம னுக்குபதேசித்தாய்
நீதிப்பிரஸ்தாபத்தோடேயே ஜீவித்தாய்
தாசன் கவிக்கா சீர்வாதமுஞ் செய்வித்தாய்
தமதுகைச் செங்கோல் தளிர் வீசவே பெற்றாய் (சூ)

---

சண்முகா உன்னிருதாள்—என்ற—மெட்டு.

65. இராகம்—இந்துஸ்தான் தோடி—தாளம்—ஆதி.

பல்லவி

வாசனே ஞானப்பிரகாசனே
வானோர்க்கதி நேசனே
தாசனைக்கண் பாருல் லாசனே (வா)

சரணம்

தேச மன்னர் புகழ்நகத் தோலீ நகரையாளுந்
தாசன் பெத்தி நாத்தாக் காதை மகனாய் வந்த
வாசனே வாலர்களினேசனே வரனுட சீஷனே
வந்தருளுஞ் சிந்தை மகிழ்ந் தெந்தனுக்காய் (வாச)

2. மூவாசையை வெறுத்து மூவினையை ஜெயித்து
தேவாசையைத்தொடர்ந்து ஆவாவென ஜெபித்து
ஒன்பது வயதினி லிம்பமா யுந்தன் கற்பை
அன்புட னொப்புவித்து அம்பரனருளடைந்தீர் (வாச)

3. பத்திரெண்டாம் வயதில் பரிவண்டியாலாத்தில்
தத்திப் பிழைத்திருந்த னுத்தம தவத்தால் பின்
பெற்றோர்கள் வீட்டில் மஞ்ச மெத்தையில் துஞ்சுகையில்.
வத்தியால் பிடித்த தீ சுற்றி எரியப்பிழைத்தீர். (வாச)

4. சரீரந்தனை வெறுத்துச் சங்கிலியாலடித்து
தரித்த விறகுக் கட்டை விரித்துப் படுத்து முட்டை
நிறுத்தியே வருத்திட வருத்தியே தரித்திரன் போல்
சாதத்தை வெறுத்தீர் ஜெகாசையை நீத்தீர் (வாச)

5. இரத்தம் பெருகியோட மெத்தக்கடினத்தோடே
மொத்திக்கயிறுல்தன்னை சுற்றியடித்துப்பரி
எத்திடுங் கல்லினையால் குத்தியே பக்தியோடே நத்தியே
அத்தனடி நித்தமுந் தொழுது வந்தீர் (வாச)

---

செந்தூர் நாயகமே—என்ற—மெட்டு.

66. இராகம்—பிலஹரி—தாளம்—ரூபகம்.

பல்லவி

சந்தந்தொனியாரே தமியேனுக்கருள்வீரே
தயாபரரே திருச் (சந்)

அநுபல்லவி

என்னைத யாம்பர னுந்தன் மீதன்பாய்
வைத்தெனை வந்தார் (சந்)

சரணம்

சித்த நித்தம் பல சித்திரப்புதுமைகள்
பத்தர் மீதிரங்கிப் பாரினில் செய்கின்ற
முத்தே நறும்பூங் கொத்தே மோக்ஷ
வித்தே எனக்கருள் (சந்)

2. நறுமணங் கமழ் மோக்ஷ ராட்சியத்தில் வாழுந்
திருவே சற்குருவே என் செந்தமிழைக்கேளும்
நாதா அருள் சமேதா கமல
பாதா போற்றினேன் (சந்)

ஜபுனை பேச்சு மத்தான்—என்ற—மெட்டு.

67. இராகம்—இந்துஸ்தான் பியாக்—தாளம்—ஆதி

பல்லவி

தாளிணை தொழுவோமே சந்தந்தோனியார் (தா)

அநுபல்லவி

ஆழிசூழுலகில் வாழுமுழிய ரெல்லோருங் கூடி (தா)

சரணம்

அம்பரனிட மன்றாடி அனேக ஞானங்கள் தேடி
நம்புமடியோர்க்கு கோடி நலமருள்வான் கொண்டாடி (தா)

2. வேண்டுவதையுமருள்வான் மிக்கானந்தந் தருவான்
தூண்டு மிந்தக்கவி பாடி துதிப்போம் யாரூங் கொண்டாடி

---

பவனகிரிய தனில் வளர்—என்ற—மெட்டு.

68. இராகம்—தோடி—தாளம் ஆதி.

பல்லவி

தவமிருந்த சவேரியாரே
தருணமருள் புரிவீரே (தவ)

அநுபல்லவி

பவமிருந்த எமக்கு வந்தா
பரனிட மன்றாடி யருளும் (தவ)

தொகையரு

அமராடு பூதவேதாளமொடு சாமுண்டி
அடங்காத பிடாரி தன்னை
நமதாண்டவனை வேண்டி நரகோட்டி அடியோர்க்கு
ஞான நன்னெறியை யூட்டி

பாட்டு.

நற்றவமியற்று மென்சாமி
நனமை புரிந்தருளு நேமி
புத்திரர்க்காகப் பூமி புகழ தினது பாதந்துணையே
புதுமையா யேகனே மன்றுடியே (தவ)

புள்ளிக்கலாபமயில் பாகன்—என்ற—மெட்டு.

69. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

தருணஞ் ஜெபத்தியாரே நீரே என்னைத்
தற்காத்தருளுந் தவத்தோரே உன்னைச்
சந்ததமுஞ் சொந்தமென்று
வந்தனஞ் செய்தேன் கடைக்கண்பாரே அருள் சீரே

2 தூயபரமண்டலத்தின் வித்தே யாருஞ்
சொல்லவொண்ணாத ஞான முத்தே உம்மைத்
தோத்திரம் புரிந்தே னெனைப்
பாத்திரக்குஞ் செய்யுந் தேவ சித்தே ஜீவசத்தே

3. வாவா ஞான மகானு பாவா வரந்
தாவா சுகிர்த குணஜீவா யே
கோவா அருள் மனு ஈவா இலங்கிடுஞ் சுபாபா
என்னைக்காவா

4. மாமறை யறிந்த நற்போதா ஜெக
மாயையை ஜெயித்த பெருநீதா தினம்
வாழ்த்தியும்மை போற்றித்துதி
சாற்றி மகிழ்ந்தேற்றுகிறேன் வாவா வரந்தாவா

ஜோர் ஜோர—என்ற—மெட்டு.

70. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ரூபகம்.

பல்லவி

தூ தா மிக் கேனு ரா தா தூய வா ன வா வருவா (தூ)

அநுபல்லவி.

ஆ தா மே வானோ, வஞ்சித்த
வேதா ளந்தன்னை பாதாளம் வீழ்த்தின (தூ)

சரணம்

எம்பரன் வாக்கையே
எதிர் பார்த்து நோக்கியே
கெம்பீரத்துடனே நிற்கும்
அம்பரனுக்குற்ற நண்பனே இத் ததி (தூ)

2. பூவகிலத்தையே போயெங்குஞ் சுற்றியே
ஆவலாகக் காவல் செய்யும்
ஐயனே மெய்யனே தூய்யனே இத் ததி (தூ)

---

செந்தமிழை யுலகினில்—என்ற—மெட்டு.

71. இராகம்—செஞ்சுருட்டி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

மங்களஞ் செய மங்களம் மங்களஞ் சுப மங்களம்
மா மரிய அன்னைக்கும் மாட்சிமை மிகும்
மாசில்லா ஸ்பீரீத்து சாந்துக்கும் பிதாச்சுதன்
மலரடி இலகிய கதி தனில் நிதியெனத்
துலங்குமர்சிஷ்ட தூயவானோருக்கும் (ம)

2. அர்ச்சய திருச்சபைக்கும் அகிலமெல்லா விளங்கும்
அரிய பெரியோர்களுக்கும் அரசு புரி
ஐந்தாஞ் ஜார்ஜி மன்னனுக்கும் மிகு
அன்புடனே கவி இன்புடனேபுக
லன்பருக்கு மிகு நண்பர்கள் யாவர்க்கும் (மங

3. அச்சியற்றிட இதற்கனுமதி செய்தவர்க்கும்
அன்பாயியற்றினவர்க்கும் அநுதினமும்
அகிமகிழப் படிப்போருக்கும் சதா
அற்புதமாகவே இப்புவி மீதிலே நற்புடன் வாழ்ந்து பின்
தற்பரனைச்சார்வார் (ம

---

முற்றிற்று




ஸௌராஷ்ட்ர பிரஸ், மதுரை.—1922.

